# தல வெண்பா

(கோவூர் திருத்தல வரலாறு)



"சைவநெறிக் காவலர்"

**முனைவர் கோவூர் இசைதாசன், டி.லிட்.,**

# தல வெண்பா

## 1. தொண்டை நாடு

1. "சோழநாடு" சோறுடைத்தாம் என்பர்,நற் "சேரமோ"
வேழம் நிறைந்தே விளங்குமாம் – ஆழகடல்
முத்துக்குப் "பாண்டி" முதன்மையாம்; "தொண்டை"யோ
வித்தகச்சீர் சான்றோர்தம் வீடு!

2. தொண்டைமான் முன்னாள் துளுவர்கள் என்கின்ற
எண்ணற்றோர் கூட்டம் இனிதழைத்தே – வண்ணபசுங்
காடுகளை வெட்டிக் கழநிகளாய் மாற்றியே
பாடுபட்டுச் செய்தான் பயிர்.

3. வேளாண்மை தன்னை விருப்பமுடன் செய்தோர்கள்
"வேளாளர்" என்னும் பெயர்பெற்றார் – தாளாற்றிப்
பெற்ற பொருள்யாவும் தக்கார்க்கும் நற்பெருமை
உற்றார்க்கும் தந்தார் உவந்து.

4. காட்டை அழித்தே கழநிகளாய் மாற்றித்தன்
நாட்டை வளஞ்செய்த நாயகன் – கோட்டையமர்
தொண்டைமான் ஆண்ட வளநாடே சான்றோர்வாழ்
"தொண்டைநா(டு)" டென்பர் தொடர்ந்து.

5. தொண்டைவள நாட்டின் துலங்கு"புலி யூர்க்கோட்டம்"
கண்டபல ஊர்களிலே ஒன்றாய் – வண்டுறையும்
பூக்கள்சேர் சோலை, புதுப்புனல்கள், யாவையும்
தேக்கியவூர் "கோவூர்" தெளி.

## 2. தல அமைவிடமும், காரணப் பெயர்களும்

6. சென்னைக்கு மேற்கினிலே பன்னிரண்டு கல்தொலைவும்,
குன்றத்தூ ரின்கிழக்கில் கல்மூன்றும் – நின்றமைந்த
நான்மாட வீதிகள்சேர் நல்லூராம் கோவூரைக்
கோன்ஆண்டார் முன்னரென் பர்

7. தேங்குபுகழ் கோவூரைத் தேர்மன்னர் ஆண்டதற்கே
மாங்காட்டுக் கல்வெட்டே சான்றாகும் – ஆங்கே
அழகியநற் சோழநல் லூர்என்றே இவ்வூர்
வழங்கியதாய்ச் சொல்வா சகம்.

8. தஞ்சைப் பெருங்கோயில் கட்டுவித்தோ னின்தந்தை
விஞ்சுபுகழ் சுந்தரசோ ழன்பெயரை – நெஞ்சம்
மறவா வழிவந்தோர் இவ்வூர்க்கே இட்டே
சிறப்பித்தார் என்பர் சிலர்.

9. வில்வவன மாக விளங்கியஇவ் வூரதனில்
நல்ல பசுவடிவில் பார்வதியாள் – வல்லமைசேர்
பூரணனைப் பூசித் தருள்பெற்ற தால்"கோவூர்"
கார;ணப்பேர் சொன்னார் கனிந்து.

10. மன்னரைக் கோவென் றழைத்திடுவர் சான்றோர்கள்
என்பதனால் மன்னர்கள் ஆட்சிசெய் – பொன்னான
இந்தவூர் "கோவூர்" எனும்பெயரைப் பெற்றதாய்
சந்ததமும் சொல்வார் சிலர்.

11. நற்பசுவைக் "கோ"வென் றழைத்திடுவர்; வானவர்கள்
பொற்பசுவாம் சீர்"காம தேனு"வே – அற்புதமாய்
இவ்வூர் இருந்தே வழிபடக்"கோ வூர்"என்றே
செவ்வியநற் பேர்வந்த தாம்!

## 3. கோவூரின் சிறப்பு

12. எண்ணற்ற சான்றோர் இலங்குதொண்டை மண்டலஞ்சேர்
வண்ணமிகு குன்றத்தூர் வாழ்ந்தவரே – கண்ணனைய
பாக்கிழார்; சோழன் "அநபாயன்" நல்லமைச்சர்
"சேக்கிழார்" என்பார் சிறந்து.

13. திருத்தொண்டர் காதைகளைத் தேர்ந்தே திரட்டித்
திருமுறையாம் பன்னிரண்டைத் தந்த – பெரும்புலவர்
சேக்கிழார்வாழ் குன்றத்தூர் சீர்பக்கல் கோவூர்வாழ்
பாக்கிழார் "கோவூர் கிழார்"

14. மண்தந்த மைந்தராம் கோவூர் கிழாருடனே
பண்தந்த மைந்தர் தியாகய்யர் – வண்ணமுடன்
பாவூறும் "பஞ்ச ரத்தினப்பா" பாடியே
கோவூர்க்கு சேர்த்தார் புகழ்.

15. மூர்த்தியுடன், தீர்த்தம், தலப்பெருமை, பெற்றிட்ட
சீர்கோவூர் வாழ்சுந்த ரேசன்மேல் – நேர்த்தியுடன்
'பஞ்சரத்னம்' பாடித் தியாகய்யர் என்றும்நம்
நெஞ்சத்தில் நின்றார் நிலைத்து!

16. வண்டூரும் சோலை, வளர்வெற்றி லைக்கொடிக்கால்
நண்டூரும் சேற்றிலே நாணிகதிர் – பண்பாய்த்
தலைகுனிந்தே நிற்கத் தவளை இசைக்கும்
கலைக்கோவூர் காண விருந்து.

17. 'அகத்தி மரக்'கணவன் ஆண்மையுடன் நிற்க
சுகமாய் அவனுடலைச் சுற்றித் – திகழ்கொடியில்
பச்சைநிற வெற்றிலைகள் பாங்காய்த் துளிர்த்திருத்தல்
இச்சைக் குரியநற் காட்சி.

18. சீர்வெற்றி லைக்கே சிவப்புப் பழங்களுண்டோ?
பார்க்கும்நின் கண்கள் பழுதாமோ? – கூர்ந்தேபார்!
கொள்ளை அழகுடனே கூர்அலகும் பெற்றுள்ள
கிள்ளைகளின் கூட்டம் அது!

19. நீரோடும் வாய்க்கால் நிரம்பிப் பயிர்செழிக்கும்;
தேரோடும் நான்மாட வீதிகளில்; – சீரோடு
செல்வம் செழிக்கும் சீர்சுந்த ரன்அருளால்
எல்லாம் துலங்கும் இனிது.

## 4. திருமேனீச்சரம் – கல்வெட்டுச் சான்றுகள்

20. ‘‘திருமேனீச் சரர்’’என்றே பேர்ஈசன் கோயில்
‘‘திருமே னீச்சரமாம்’’ நாமம் – பெருமையுடன்
பெற்றே திகழ்ந்ததாய் பேசும்கல் வெட்டுக்கள்
உற்றதிருக் கோயில் இது.

21. நூறுபத்து ஆண்டுகள்முன் கோயிலிதைக் கட்டியதாய்க்
கூறுகின்ற கல்வெட்டால் நாமறிவோம் – வேறுபல
கல்வெட்டுக் கள்இங்கே காண்கின்றோம் யாவுமே
சொல்லுமிதன் தொன்மைச் சிறப்பு.

22. சீர்புலியூர்க் கோட்ட திருமேனி ஈசர்க்கு
ஓர்இடையர் ஸ்ரீபலியைச் செய்விக்க – தேர்ந்தே
நிலதானம் செய்விபரம் மற்றோர்கல் வெட்டால்
புலப்படவே காணலாம் நாம்.

23. மன்னாதி மன்னன் மகிழ்சுந்த ரச்சோழன்
ஒன்பதாம் நல்லாட்சி ஆண்டதனில் – முன்கண்ட
சீரார்ந்த இந்தக் கல்வெட்டைச் செய்ததாய்
ஆராய்ச்சி யாளர் கருத்து.

24. திருமேவும் தஞ்சையின்‘கோ’ ராஜராஜன் ஆட்சி
இருபான்மூன் றாமாண்டில் இந்த – திருக்கோயில்
நந்தா விளக்கேற்ற தானமாய் ‘ஆட்டுமந்தை’
அந்தணர் தந்தார் அது.

25. விருப்புடன்இத் தானம்சொல் கல்வெட்டைச் சென்னை
அருங்காட்சி சாலைதனில் நாம்காண – பொறுப்பேற்றே
எண்ஐநூற் றுப்பத்தாய் இட்டார்கல் வெட்டிதற்கே
கண்கூடாய்க் காணலாம் நாம்.

26. ஓரா யிரத்திருநூற் றைம்பத்து மூன்றதன்
நேராம் சனவரி ஐந்தாம்நாள் – சீரார்ந்த
காஞ்சி வணிகர்இக் கோயில் விளக்கெரிக்க
வாஞ்சையுடன் தந்தார் பணம்.

27. என்கின்ற உண்மை இயம்புசீர் கல்வெட்டு
தென்புற உட்சுற்று சீர்சுவரில் – "தென்முக
மூர்த்தி" திருவுருவின் கீழ்காண லாகுமே
கீர்த்திமிகும் கோயில் இதில்.

28. சீர்தெலுங்குச் சோழன் விஜயகண்ட கோபாலன்
நேர்மூன்றாம் நல்லாட்சி ஆண்டான – மேற்கண்ட
கல்வெட்டில் இக்கோயில் ராஜரா ஜேஸ்வரப்பேர்
சொல்வதுவே உண்மை உணர்.

## 5. கோயில் அமைப்பு முறை

29. பல்லவர்க ளைவென்ற பாங்குசீர் சோழர்கள்
எல்லையிலா அன்பால் இறைபணியை – ஒல்லும்
வகைசெய்தார் ஆலயங்கள் தம்மைஆங் காங்கே;
தொகைதொகையாய்த் தந்தார் நிதி.

30. நிதியும், நிலமும், நிவந்தமும் தந்தே
பதியாம் பரமன்வாழ் கோயில் – அதிசிறக்க
நற்சோழ மன்னர்கள் நாடாண்ட காலமே
பொற்காலம் என்பர் புரிந்து.

31. தூங்காளை மாட வடிவுடைய கோபுரங்கள்
வீங்குபுகழ் சோழர்கள் முத்திரையை – பாங்குடனே
என்றும் உணர்த்தும் என்பதற்கே இக்கோயில்
பொன்றாப் புகழ்மேவும் சான்று.

32. ''பா''வென்றால் ''வெண்பா'' பரந்த புகழ்சேர்ந்த
''கோ''வென்றால் ''ராஜராஜ சோழனே'' – 'பூ'வென்ற
மன்னன் இவன்பெயரை மாண்புடனே வைத்தார்கள்
பின்வந்த சோழரெலாம் போற்றி!

## 6. திருமேனீச்சரர் சுந்தரேசுரரானது

33. வடமொழியின் ஆதிக்கம் வந்தீசன் நாமம்
உடனடியாய் அம்மொழியில் மாற – நடைமுறையில்
''சுந்த ரேசுரராய்'' ஆனதே என்றிடினும்
என்றும் அழகன் இவன்.

34. அழகனுக்கே வாய்க்கும் அருந்துணையும் நல்ல
அழகியே ஆவாள் அதுபோல் – அழகனிவன்
தேவியும் ''சௌந்தரியே'' என்பர்; திருநாமம்
மேவிய சீர்பொருத்தம் மேல்.

35. காலைக் கிழக்கின் கதிரவன் நேர்வணங்கி
வேலை தொடங்கும் விதத்தினிலே – கீழைக்
கிழக்கு திசைநோக்கும் ஈசன்; கருணை
வழங்குவதி லேவல் லவுன்!

36. தூங்கானை மாடச்சீர் கோபுரத்தின் கீழிருந்தே
பாங்காய் தமைநாடும் பக்தர்கள் – தாங்கவொணா
துன்பம் துடைத்தே; தொடரும் இகவாழ்வில்
இன்பம் வழங்கும் இறை.

சகலவிதமான ஆங்கில மருந்துகளும் எல்லா
நேரங்களிலும் வாங்கச் சிறந்த இடம்

# சரஸ்வதி மருந்தகம்

3/100, குன்றத்தூர் மெயின் ரோடு,
கோவூர்
**தொலைபேசி : 5780576**



**எல்லாவிதமான ஆவணங்களின்
நகல்களும் சிறந்த முறையில் எடுத்துதர**

# சரஸ்வதி நகலகம்

3/100, குன்றத்தூர் மெயின் ரோடு,
கோவூர், சென்னை -602 101,
(கோவூர் பேருந்து நிலையம் அருகில்)

**"தலவெண்பா" சிறக்க எங்கள் இதயங்கனிந்த
நல்வாழ்த்துகள்**

சரஸ்வதி அம்மாள்
இரா. செல்வமணி - கமலி செல்வமணி
இரா. பழனி - கீதா பழநி
இரா. சிவசங்கரன் - மாலதி சிவசங்கரன்
குழந்தைகள்
ப. சாந்தலிங்கம், செ.வைஷாலி,
சி. சந்தோஷ்சிவன்.

37. தென்திசையை நோக்கித் திகழ்சௌந்த ராம்பிகை
தன்பார்வை வைத்தே தனியறையில் – புன்முறுவல்
பூத்தேநிற் கின்றாள்; பொலியும்பக் தர்கூட்டம்
காத்தேநிற் கும்கரங்கள் காட்டி!

## 7. தினகரர் செய்த திருப்பணிகள்

38. பதினோராம் நூற்றாண்டின் பிற்பகுதி இவ்வூர்
மதிசூழ் தினகரர் வாழ்ந்தே – அதிசிறந்த
நல்ல திருப்பணிகள் ஆற்றியதை வெண்பாநூல்
சொல்ல அறிந்தோம் சுவை.

39. அக்கால மன்னனாம் அச்சுதப்ப நாயக்கர்
தக்க தளபதியாய் நல்லமைச்சாய் – மிக்க
வனப்பாய் "தினகரர்" வாழ்ந்ததாய்க் கூறும்
"தினகர வெண்பா"வாம் நூல்.

40. கார்போல் பெருங்கொடையும், கல்வி, ஒழுக்கங்கள்,
நேர்மையும், கொண்ட தினகரர் – 'தேர்'செய்தும்
தேரோடச் செய்தும், திருக்குளத்தை வெட்டுவித்தும்
சீரோடு வாழ்ந்தார் சிறந்து.

41. இறைபணிகள் அல்லாமல் இன்பத் தமிழ்க்கே
நிறையப் பணிசெய்தே வாழ்ந்த – குறைகாண
ஒண்ணா "தினகரர்" ஒப்பற்ற சேவைகளை
"வெண்பா"வே சொல்லும் விளக்கி.

42. "சிவன்பாதம் போற்றும் தினகரா" வென்றே
இவன்புகழைச் சாற்றிடும் "வெண்பா" – தவசீலர்
சீரார் தினகரரின் செம்மை அருள்நெஞ்சம்
பாரோர்க்குக் காட்டும் பரிந்து.

## 8. கோவூர்கிழாரின் மாண்புகள்

43. சங்க இலக்கியத்தைச் சார்ந்தபுற நானூறில்
அங்கம் வகித்த அரும்புலவர் – எங்களூர்
கோவூர் கிழாராவார்! கொற்றவர்கள் நால்வரை
நாவூரப் பாடியவர் நன்கு.

44. "நலங்கிள்ளி" "நன்நெடுங் கிள்ளி" "குள முற்றம்
நிலம்வீழ்ந்த கிள்ளி வளவன்" – பலவானாம்
"காரியாற்றுத் துஞ்சும் நெடுங்கிள்ளி"ச் சோழர்களை
நேரிருந்து பாடியுளார் நின்று.

45. சீர்புலவன் "தத்தனவன்" ஒற்றனெனத் தவறாக
ஓர்முடிவை மன்னன் "நெடுங்கிள்ளி" – தேர்ந்ததனை
கோவூர் கிழார்கண்டே குற்றம் உணர்த்தியே
பாவலனைக் காத்தார் பரிந்து.

46. மலையமான் பெற்றெடுத்த மைந்தர்கள் தம்மை
மலைவேழம் காலில் இடறிக் – கொலைசெய்ய
கிள்ளி வளவனின் கீழாம் செயல்தடுத்தே
பிள்ளைகளைக் காத்தார் கிழார்.

47. மன்னர் புகழ்பாடி மாப்பரிசில் கொள்ளுவதே
என்றும் புலவர் தொழிலென்ற – தன்மையினை
பொய்ப்பித்தே நல்ல புகழ்சேர் பணிசெய்த
மெய்ப்புலவர் கோவூர் கிழார்.

## 9. தியாகய்யர் பாடிய "கோவூர் பஞ்சரத்னம்"

48. செங்கரும்புக் கீர்த்தனங்கள் ஸ்ரீராமன் மீதினிலே
தங்கத் தியாகய்யர் செய்தே – "சங்கீத
மும்மணிகள்" தம்மில் ஒருவராய் நின்றதுவே
செம்மார் இசைக்குச் சிறப்பு.

49. என்றும்ஸ்ரீ ராமன் உருவம் மனதிருத்திப்
பொன்றாப் பொலிவான கீர்த்தனைகள் – நன்றாகப்
பாடிப் பணிந்த "தியாகய்யர்" கோவூரை
நாடியே வந்தார் நயந்து.

50. வரம்நல்கும் சுந்தரனின் கோயிலிதைப் பேணும்
பரம்பரை தர்மகர்த்த ரான – விரதமிகு
சுந்தரர் என்னும் முதலியார் வேண்ட
வந்துற்றார் கோவூர் இவர்.

51. வந்த "தியாகய்யர்" வாயார கீர்த்தனங்கள்
தந்திட்டார் "பஞ்சரத்னப்" பாக்களாய் – சந்ததமும்
பொற்பாடல் எங்கும் ஒலித்திடவே நாம்கேட்கும்
நற்பேறு பெற்றோம் நயந்து.

52. "சம்போ மகாதேவ," "ஈவசுத நீவம்டி",
"நம்மிவச் ன" "கோரி சேவிம்ப", - செம்மைசீர்
"சுந்த ரேச்வருநி" யாம்"பஞ்ச ரத்னப்பா"
சந்ததமும் சாற்றும் புகழ்.

53. என்றும்ஸ்ரீ ராமனையே ஏத்தும் "தியாகய்யர்"
பொன்றாப் புகழ்சுந்த ரேசனாம் – மன்றாடும்
ஈசனைப் பாடினார் என்றால் அதன்பெருமை
பேச அரியநற் பேறு.

54. பன்னாட்கள் தங்கியே"பஞ்சரத்னம்" பாடியபின்
சென்றே பலதலங்கள் சேவிக்க – அன்புடனே
வந்த தியாகய்யர் பல்லக்கில் பொன்முடிப்பை
சுந்தரர் வைத்தார் சுகம்.

55. நாயகன்ஸ்ரீ ராம நவமியினைக் கொண்டாட
நேயமுடன் வைத்தேன் நிதியிதனை – தூயமிகு
அன்பளிப்பை ஏற்கவென சீடர்குப் பையரிடம்
சொன்னார் முதலியார் சொல்.

56. அன்பளிப்பை 'ஐயா' அறவே விரும்பிடார்
என்றிடினும் இப்பொருளால் ஸ்ரீராமன் – பொன்னாம்
நவமி விழாசெய்ய நாமேற்போம் என்றார்
தவஞ்சேர்ந்த "குப்பையர்" தாம்.

57. செல்லும் வழியிலே நாகலாபு ரம்தன்னைப்
பல்லக்கு சென்றடைந்த வேளையிலே – மெல்லஇரு
கள்வர் தொடர்ந்தார் களவாடப் பொன்மூட்டை
நள்ளிரவு வேளை நயந்து.

58. கள்வர் தொடரத் தியாகய்யர் காதினிலே
மெள்ள விபரங்கள் குப்பையர் – உள்ளபடி
எல்லாம் உரைக்கத் தியாகய்யர் கேட்டபடி
நல்லதெனச் சொன்னார் நயந்து.

59. இந்தப் பணமுடிப்பு என்ராமன் சொந்தமெனில்
அந்தஸ்ரீ ராமன் அதைக்காப்பான் – என்றபடி
கண்மூடித் த்யாகய்யர் பக்தியிலே மூழ்கிடவும்
திண்ணுருவம் வந்த(து) இரண்டு.

60. கள்வர் பணமுடிப்பைக் கொள்ளாமல் காப்பதற்கே
வள்ளல்ஸ்ரீ ராம இலக்குவர்கள் – நள்ளிருளில்
வில்லம்பு ஏந்தியே பல்லக்கை காத்துவந்தே
அல்மறையத் தாமுமறைந் தார்.

61. விந்தை இதனை விழித்த தியாகய்யர்
அந்தம் வரைகேட் டறிந்திட்டே – சந்ததமும்
நான்பாடும் ராமா! எனக்கிலையோ நின்காட்சி!
ஏன்என்றார் துன்பம் மிகுந்து.

62. என்றிடினும் ராம இலக்குவர்கள் நீரெமக்கே
பொன்றாப் பெருந்துணையாய் நின்றீரே! – என்னநற்
பேறுநாம் பெற்றோம் பெருமானே என்றே
ஆறுதலைப் பெற்றார் அவர்.

## 10. பாடல்பெற்ற பதி

63. சீர்தியாக ராசரவர் 'பஞ்சரத்னம்' பாடியதை
ஊர்க்கவிஞர் கோவூர் இசைதாசன் – பார்த்திட்டே
செந்தமிழ் வெண்பாவில் சௌந்தரியாம் அம்பிகைமேல்
'அந்தாதி' பாடியுள்ளார் ஆய்ந்து.

64. அம்பிகை'அந் தாதி' 'அடைக்கலப் பத்து'ப்பா
செம்மையுடன் செய்த இசைதாசன் – இம்மண்
இறை"சுந்த ரேச சதக"மும் பாடி
நிறைமனம் கொண்டுளார் நின்று.

## 11. இராஜகோபுரப்பணியும், குடமுழுக்கு விழாவும்

65. அருமைமிகும் கோயிலிதன் ராஜகோபு ரத்தின்
திருப்பணிகள் நாற்பத்து நான்கில் – பெருமையுடன்
ஆரம்பம் செய்தே அடித்தளம் யாவும்
கருங்கல்லில் செய்தார் கலை.

66. நாற்ப தடிநீளம் முப்ப தடியகலம்
சாற்றும் உயரம் இருபதுடன் – போற்றவரும்
கற்சிற்பம் கொண்ட கலைசேர் அடித்தளங்கொள்
நற்கோபு ரம்செய்தார் நன்கு.

67. சீரார்ந்த சிற்பிகள் செய்தகருங் கல்தளம்மேல்
ஓரேழ் நிலைகள்கொள் கோபுரத்தை – பாராட்டும்
நல்லவகை "மாயவரம் ராமய்யா" செய்தேதன்
வல்லமையைச் சொன்னார் வகை.

68. நவமார் சுதைச்சிற்ப வேலைகள் தம்மை
சிவப்பிர காசர் மிகுந்த – கவனமுடன்
செவ்வனே செய்தார்; சிவபதஞ்சேர் தம்தந்தைக்(கு)
எவ்விதமும் சோடையிலை என்று.

69. விசுவா வசுஆண்டு சித்திரை,பத் தாம்நாள்
பசுபதியின் கோயில் பணிகள் – உசிதமாய்
ஆரம்பம் ஆகியா றாண்டில் முடிந்தது
பேரம்ப லத்தான் அருள்.

70. சீர்விரோ திக்கிருது ஆனி,இரு பத்தொன்றில்
நேர்திங்கள் காலை நியமமுடன் – ஊர்திரள
நல்ராஜ கோபுரத்தின் நன்னீராட் டைக்கண்டே
எல்லோரும் பெற்றார் உவப்பு.

71. சென்னைசேர் வானொலியார் சீர்ராஜ கோபுரத்தின்
பொன்னார் "குடமுழுக்கு வர்ணனையை" – அன்பரவர்
"நல்லதம்பி", அம்மை "ஜெயகுமாரி பாஸ்கரன்"
சொல்லிடவே செய்தார் சுகம்.

72. சீர்ராஜ கோபுரத்தின் செம்மார் சிறப்புகளை
தேர்ந்தே கவியாக்கம் செய்திட்ட – ஊர்க்கவிஞர்
கோவூர் இசைதாசன் வர்ணித்தார் நேர்முகமாய்
நாவூறும் பாடல்களால் நன்கு.

73. நேர்வந்தோர் கோடி; குடமுழுக்கை வானொலியின்
சீர்வர்ண னைகேட்டோர் கோடியென – ஆர்வமுடன்
எல்லோரும் பக்தி மழையில் நனைந்திட்டே
பல்வளமும் பெற்றார் பரிந்து.

## 12. ராஜகோபுரத்தின் சிறப்பு

74. சீர்சிவன் கோயில்கள் கோபுரங்கள் தாங்கிநிற்கும்
தேர்ந்தசுதைச் சிற்பங்கள் யாவுமே – பார்க்கவரின்
எல்லாம் சிவனின் விளையாடல் காட்சிகளைச்
சொல்வதையே காணலாம் நாம்.

75. கோவூரின் சீர்ராஜ கோபுரச் சிற்பங்கள்
நாவூரப் "பஞ்சரத்னம்" பாடியவர் – பாவூர்
புகழ்தியாக ராசர் சரிதம்பூ ராவும்
திகழ்செயல் காணல் சிறப்பு.

76. மன்னர்கள் மாளிகையின் பெண்டிர் அமர்வதற்கே
முன்வளர்ந்த சீர்நிலா முற்றம்போல் – நன்முறையில்
ஒவ்வோர் நிலையதன் முன்னும் நிலாமுற்றம்
செவ்வனே காணல் சிறப்பு.

77. முன்னும்பின் னாக நிலைதோறும் வாயில்கள்
என்றமைய நாம்காண்போம் கோபுரத்தில் – இன்றிங்கே
ஒவ்வோர் நிலைகளிலும் நாற்புரமும் வாயில்கள்
செவ்வனே காணல் சிறப்பு.

78. உச்சியிலே பொன்சேர் ஒளிர்கலசம் ஒன்பதுடன்
மெச்சும் சிறப்பியல்கள் கொண்டிங்கே – கச்சிதமாய்
வான்நோக்கி நிற்கின்ற கோபுரத்தின் நல்லழகை
நான்கூறக் கூடுமோ நன்கு.

## 13. மூர்த்தங்களின் அமைப்புமுறை

79. 'நர்த்தனவி நாயகரும், வேலவனும், கோபுரத்தின்
கர்த்தாக்க ளாயிரண்டு மாடத்தில் – அற்புதமாய்
காட்சி யளிக்கக்கை கூப்பியே கோயிலுக்குள்
மாட்சியுடன் செல்வோம் மகிழ்ந்து.

80. இடபச் சிவனும் எதிரிலே அம்மை
இடம்பெற்றுள் ளார்உட் சுவரில் – கடந்துசென்றால்
நான்முகன், நல்உபய நாச்சியார், நாரணனாம்
வான்தேவர் கண்டுதொழ லாம்.

81. நல்ஞானக் கண்ணும் அறிவுக்கண் ணும்வழங்க
வல்ல விநாயகரின் சந்நிதியை – செல்லும்
வாயிலெதிர் கண்டே வணங்கி வரம்பெற்றே
கோயிலதைச் சுற்றிவர லாம்.

82. நேத்திரவி நாயகரின் சந்நிதியின் மேலழகாய்
பூத்ததிருக் கைலாயக் காட்சியிலே – மூத்தோன்
கணபதி, கந்தன், கனிபெறவே நிற்றல்
உணரலாம் கண்டே உவந்து.

83. 'நவசக்தி யர்'குறிக்கும் ஒன்பான் துவாரம்
சுவரில் இடப்பாகம் காண்போம் – நவதுவாரம்
நல்வழியே சௌந்தரியாம் நாயகியை நாம்கண்டே
செல்லலாம் நல்வெளிச் சுற்று.

84. அம்பிகையை நோக்கி அவள்,வாக னம்'சிம்மம்'
செம்மை 'பலிபீடம்' சீருடனே – நம்கண்கள்
காண வலம்வருவோம் கைகூப்பிச் சுற்றியே
மாணப் பெரிதும் மகிழ்ந்து.

85. சீர்த்த வெளிச்சுற்று தென்மேற்கு மூலையிலே
நேர்த்தியாய் ஞான கணபதியை – பார்த்தே
தொழலாம்நாம் தோப்புக் கரணங்கள் போட்டே
எழலாம் தரைமீதில் வீழ்ந்து.

86. அண்ணனை ஏத்தி அடுத்து வலம்வந்தால்
வண்ண வடமேற்கு மூலையிலே – கண்ணான
செந்தமிழ்வேள் வேலவன், வள்ளிதெய்வ யானைசேர்
சந்நிதியைச் சந்திக்க லாம்.

87. கண்கவர் சுற்றின் முடிவில் அலங்கார
மண்டபத்தைக் காண்போம் மகிழ்வுடனே – வண்ணமிகும்
இம்மண்ட பச்சீர் சலவைக்கல் காட்டிடுமே
செம்"பஞ்ச ரத்தினப் பா"

88. மண்டபத்தை ஒட்டிக் கிழக்கு வெளிச்சுற்றில்
விண்ணார் கொடிமரமும் பக்கலிலே – வண்ணமிகும்
"நல்பலி பீடமும்", "நந்திதேவர் மண்டபமும்"
சொல்லுமே சிற்பச் சுகம்.

89. தனியான சந்நிதியில் தண்கிழக்குச் சுற்றில்
சனிபகவான் வீற்றுமேற்கு நோக்கி – கனிவாக
தன்னெதிரே வீற்றிருக்கும் "ஞான கணபதி"யை
என்றும் தொழுவார் இனிது.

90. தனித்த சனிபகவான் சந்நிதியின் பக்கல்
நனிசீர் நவக்கிரக சந்நிதியை – இனிதாய்க்
காண்போம், வினைநீக்க வேண்டி வலம்வந்தே
மாண்புடனே வாழ்வோம் மகிழ்ந்து.

91. கடைசியாய் தென்கிழக்கு மூலையிலே காண்போம்
மடைப்பள்ளி தன்னை மகிழ்வாய் – விடையேறும்
ஈசர்க்குச் செய்யும் இனிய பிரசாத
வாசம் பிறக்கும் இடம்.

92. அட்டதிக்கு பாலகர்கட் கானபலி பீடங்கள்
எட்டதனை வெளிச்சுற் றிதனில் – திட்டமிட்டே
சீர்த்தியுடன் நன்முறையில் செய்துள்ள காட்சியினை
பார்த்திடலாம் இங்கே பரிந்து.

## 14. உட்சுற்றில் அமைந்த மூர்த்தங்கள்

93. சீர்கிழக்கு நோக்குகின்ற உள்வாயில் நாம்நுழையின்
நேரே அமைந்த கருவறையில் – நேர்த்திமிகும்
லிங்க வடிவாய் "திருமேனி ஈசனை" நாம்
தங்கியருட் செயக்கா ணலாம்.

94. நலமுடனே ஈசனைகை கூப்பித் தொழுதே
வலம்வருவோம் உட்சுற்றில் நாமே – வலப்புறம்
வீற்றிருக்கும் கோட்ட கணபதியைக் கைதொழுதுப்
போற்றி வணங்கப் புகழ்.

95. சமயக் குரவர்கள் நால்வர்தென் பாகம்
அமைந்திடவே காணலாம் ஆங்கே – உமையுருவாம்
வீரபத்ர காளியுடன் வீரபத்ரர் தோற்றம்
தரக்காண்போம் பக்கலிலே தங்கி.

96. உட்சுற்றில் ஈசன் கருவறை சீர்சுவரில்
வெட்டியுள்ள மாடத்தில் வீற்றிருக்கும் – தட்சிணா
மூர்த்தியார் ஆலம்கீழ் மாமுனிவர் நால்வர்க்கே
சீர் 'அறம்' சொல்லல் சிறப்பு.

97. இம்மூர்த்தத் தின்கீழ் இரண்டு"கல் வெட்டுக்கள்"
செம்மையுடன் வைத்திருத்தல் காணலாம் – செம்மார்ந்த
இக்கல்வெட் டுக்கள் இயம்புகின்ற செய்திகளை
தக்கபடி நாம்கண்டோம் முன்பு.

98. உட்சுற்றுக் கோடியிலே தென்மேற்கு மூலையிலே
உட்கார் நியதி விநாயகரை – மட்டற்ற
பக்தியொடு நாம்பணிந்தே பக்கத் தறைகளிலே
சக்திதிரு மேனிகாண் போம்.

99. சீரார் முதல்அறையில் "சோமாஸ்கந் தர்"உருவம்
வீரார் "பராசக்தி" அம்மனெனும் – சீரார்ந்த
"சுக்ரவார அம்மன்" அடுத்தஅறை மேடையிலே
விக்ரகமாய் வீற்றுள்ளார் நன்கு.

100. "சந்திர சேகரர்"சேர் "சௌந்தர நாயகி"யாள்
நந்தா "கருணா கரப்பெருமாள்" – செந்தமிழ்வேள்
வேலனுடன் வள்ளியார் தேவயானை மூர்த்தங்கள்
கோலமுடன் காணலாம் நாம்.

101. வடமேற்கு மூலையின் சீர்சந் நிதியில்
மடவார் இருவர்புடை சூழ – விடமுண்ட
கண்டனின் செல்வன் முருகனாம் மூலவரைக்
கண்டே களிக்கலாம் நாம்.

102. வண்ணமிகும் இவ்வரிசை நேரே கருவறைப்பின்
"அண்ணா மலையார்" அமர்ந்துள்ளார் – வண்ணச்
சுவர்சார்ந்த கோட்டத்தில் தோன்றியே நெஞ்சம்
கவர்வதனைக் காணலாம் நாம்.

103. மேலே பிரமனவன் அன்ன வடிவினிலும்
மாலவன் பன்றியாய்க் கீழேயும் – சீலநடு
அங்கம் வகிக்கின்ற லிங்கம்அண் ணாமலையார்
"லிங்கோத் பவராய்ப்" பொலிந்து.

104. ஆங்கோர் அறையில் "அறுபத்து மூவர்கள்"
பாங்குஉலா மேனிகளாய்ப் பார்க்கலாம் – தீங்ககற்றும்
நன்கிராம தேவதைகள் நல்"மாரி யம்மனுடன்"
"பொன்னியம்மன்" மேனிகளும் உண்டு.

105. பிட்சா டணமூர்த்தி, குண்டோ தரன்,மான்,
இட்டமுள்ள தேவியார் மோகினியும் – மட்டில்
கலைப்படைப்பாய் செம்பொன் உலாத்திரு மேனிகளாய்
நிலைபெற் றிருத்தல் நிசம்.

106. நாயகனாம் சுந்தரனும் நாயகியாள் சௌந்தரியும்
நேயமுடன் கட்டில் அமர்ந்துள்ள – தூயநல்
பள்ளியறை, பக்கலிலே நல்வேள்விச் சாலையும்,
உள்ளதனைக் காணலாம் நாம்.

107. சிவனார் கருவறையின் சீர்வடக்கு காணின்
புவனம் படைத்த பிரமன் – உவமையிலா
துர்க்கையாள் காட்சிதர, தூயசெவ் வாய்,வெள்ளி,
அர்ச்சிப்பார் பெண்கள் பலர்.

108. அருள்சௌந்த ரம்மை கருவறையில் நின்றே
வரும்பக்தர் வேண்டும் வரங்கள் – அருள்வதற்கே
தென்திசை நோக்கித் திகழ்ந்திடல் காணுவது
முன்செய்த நம்புண் ணியம்.



ஐராவத தீர்த்தம் என்னும் சிவகங்கை



தெப்பக்குளமும் கோயிலும்

109. அம்மன் கருவறை ஆன்ற புறச்சுவரில்
அம்மைவடி வங்களாம் ஐந்துமே – செம்மையுடன்
காணப் பெறலாம் கவினழகுக் காட்சியாய்
மாணப் பெரிதும் மகிழ்ந்து.

110. அம்பிகையின் சந்நிதியைச் சுற்ற வடகிழக்கில்
செம்பொன் "நடராசர்" மேனியுடன் – அம்மன்
சிவகாம சுந்தரிசேர் "சுந்தரச்ச பை"தன்
நவமான காட்சிகாண் போம்.

111. எம்பெருமான் ஆட எடுத்த திருவடிக்கீழ்
செம்மைசீர் "மாணிக்க வாசகர்" – தம்மைக்
காணலாம்; மேற்கில் பைரவரின் தோற்றமது
பேணவரும் நல்லழகுக் காட்சி.

112. "சேக்கிழாரும்" "சூரியனும்" சீர்வடக்கு தெற்கினிலே
நோக்கரிய பாகத்தில் நிற்பதனை – தூக்குபுகழ்
உள்வாயில் தம்மின் இருபுறமும் கண்டேநாம்
உள்ளம் உவப்போம் இனிது.

## 15. திருக்குளம்

113. நான்கு புறம்படிகள் நன்கமைந்தே தெள்ளியநீர்
பாங்குடனே கொண்ட திருக்குளத்தை – வான்அரசன்
இந்திரனின் யானையாம் ஐராவ தம்அகழ்ந்தே
வந்ததாம் இந்தக் குளம்.

114. என்பதற்குச் சான்றாக இந்தக் குளக்கரையில்
நந்தியா வர்த்தச் செடியின்கீழ் – சந்ததமும்
ஓர்லிங்கம், கீழ்யானை நல்வடிவங் கள்தம்மைப்
பார்த்திடலாம் இற்றைக்கும் நாம்.

115. பெருமைசேர் இந்தஜ ராவதத் தீர்த்தம்
திருக்கோயில் ஈசன் எதிரில் – அருகில்
அமையத் திருவிழாத் தெப்பத்தில் ஈசன்
உமையோடு செல்வார் உவந்து.

116. "சிவகங்கை" என்றும் பெயர்பூண்டே நம்மைக்
கவர்ந்திடும் இக்குளத்தைச் சுற்றி – நவமார்
பூச்செடிகள் பூத்தீசன் பூசனைப் பொருளாதல்
ஆச்சரியம் இல்லை அறி.

## 16. தலமரம்

117. நலந்திகழும் கோவூர் நடுவிலமைக் கோயில்
தலமரமாய்க் காண்பதுவே "வில்வம்" – பலப்பலவாய்
இப்போதும் இந்த இனியவில் வந்தருக்கள்
தப்பாமல் காணலாம் இங்கு.

118. ஐந்து முகங்கொண்ட ஆதிசிவன் போன்றதாய்
ஐந்துதள வில்வமரம் இவ்வூரில் – பைந்தமிழ்போல்
சீர்மையாய் நன்கு சிறந்தொளிர்தல் இன்றும்நாம்
பார்த்தே மகிழலாம் நன்கு.

119. நாகப் படத்தின் நடுவிலோர் லிங்கமுடன்
நாகலிங்கப் பூகொத்தாய் பூக்கின்ற – நாகலிங்க
சீர்மரம் ஒன்றைப் பழமையின் சின்னமாய்ப்
பார்க்கலாம் நாமின்னும் நன்கு.

## 17. தினப்பூசனைகளும் திருவிழாக்களும்

120. காலையிலே ஒன்றும் கடும்உச்சி யில்ஒன்றும்,
மாலை,மற் றும்அர்த்த சாமமென, – சோலைமிகும்
இவ்வூர் திருக்கோயில் ஈசர்க்குப் பூசனைகள்
செவ்வனே செய்வார் தினம்.

121. மாதப் பிறப்பு, மறைமதிநாள், தன்னோடு
சீத நிறைமதிநாள், மற்றாங்கே – மாதப்
பிரதோடம், பஞ்சபர்வ உற்சவங்கள், யாவும்
அரனுக்குச் செய்திடுவார் இங்கு.

122. அம்பிகைக்கு நாள்வெள்ளி, ராகுகாலப் பூசனைகள்
செம்மையுடன் செய்கின்ற வேளையிலே – தம்பி
முருகனுக்கு சஷ்டி, கிருத்திகைப் பூசை,
அருமையாய்ச் செய்திடுவர் ஆய்ந்து.

123. கார்த்திகை தீபம், நடராசர் நீராட்டு,
கார்த்திகை சோமவாரம், ஆதிரைநாள் – சீர்த்திமிகும்
சங்காபி டேகம், சதுர்த்தி, நவராத்திரி,
இங்குசெயும் நல்விழாக்க ளாம்.

124. ஆண்டுதொறும் வைகாசி சேர்விசாக நன்னாள்
ஆண்டவராம் சுந்த ரேசுரர்க்கு – யாண்டும்
திருக்கல்யா ணம்சேர் திகழ்பத்து நாட்கள்
திருவிழா செய்வர் தெளிந்து.

125. பத்துநாள் நல்விழாவின் மூன்றாம்நாள் காலையில்
முத்தாய் அதிகார நந்தியும் – உத்தமர்கள்
அறுபத்து மூவர் அடுத்தநாள் காண்போம்
சிறுதேரில் ஒன்றாய் இணைந்து.

126. அஞ்சாம்நாள் மாலை அணிசேர் விழாவில்
பஞ்சமூர்த்தி பொன்,வெள்ளி, வாகனத்தில் – கொஞ்சும்
அலங்காரத் தோடு அணிமாட வீதிகளில்
வலம்வரக் காணலாம் நாம்.



சுவாமி, அம்மன் கருவறைக் கோபுரங்களும் அதன் பின்னணியில் இராஜகோபுரமும்



ஸ்ரீபலி நாயகரின் முன்னிலையில் ஸ்ரீபலி நடைபெறுதல்

127. ஆறாம்நாள் காலையில் ஐயனும், அம்பிகையும்,
வேறாய் இரண்டுதேர் வீற்றிருக்க – ஊரை
பவனிவரச் செய்வர்; வடமிழுத்தே பக்தர்
அவனியிது உய்யும் பொருட்டு.

128. பத்தாம் திருநாள் பரமனும், அம்பிகையும்,
முத்தாய் திருமணம் கொண்டேபின் – முத்துப்பூ
பல்லக்கில் ஏறி பவனிவருங் காட்சியது
எல்லையிலா இன்பம் தரும்.

129. தற்சமயம், பத்துநாள் சீராய் நடைபெற்ற
உற்சவம்"வை காசி விசாகத்தில்" – அற்புதமாய்
ஓர்நாள் விழாவாய் ஒளிரும் சிறப்பதனைப்
பார்க்கலாம் இன்னும் பரிந்து.

## 18. ஸ்ரீபலி

130. "நித்யோத் சவம்"என்னும் "ஸ்ரீபலி", ஆண்டவன்
நித்தம் படியளக்கும் தன்மையதாய் – பத்துதிக்கு
பாலகர்க்கும், அட்டதிக்கு பூதங்கள், யாவர்க்கும்
சாலவுண வூட்டும் நிகழ்ச்சி.

131. பத்துதிக்கு பாலகர்கள் தம்முள் "மகாவிஷ்ணு"
இத்தரையின் "பாதாளம்" காத்திடவும் – வித்தகராம்
"நான்முகன்" "விண்"காக்க, ஏனையோர் அட்டதிக்கு
தான்காக்கும் பாலகர்க ளாம்!

132. எட்டுதிக்கு பாலகர்க்கும் இந்ததிருக் கோயிலிலே
எட்டுதிக்கும் சீர்த்தபலி பீடங்கள் – இட்டமுடன்
உண்டாம், பெரியபலி பீடத்தின் மேலுணவு
உண்ணவைத்த லேஸ்ரீ பலி.

133. அரிய நிவேதனத்தின் ஓர்பகுதி தன்னைப்
பெரியபலி பீடத்தில் வைத்தே – உரியவாம்
நீரைத் தெளித்தே காக்கைக்கு வைத்திடுதல்
சீராய் நடக்கும் முறை.

134. சீர்ஆக மப்படி ஈசன் எழுந்தருள
நேர்முன் 'பலி'செய் நியமத்தை – சீரார்
சிலதலங்க ளில்மட்டும் காணலாம்; கோவூர்
சிலதலங்க ளில்ஒன்றாம் சீர்.

135. ஒராயி ரம்ஆண்டாய் ஒண்ஆக மப்படியே
சீரார்நித் யோத்சவமாம் "ஸ்ரீபலி" - ஆராயின்
இந்தத் திருக்கோயில் ஏற்றவகை ஆகமமாய்
சந்ததமும் செய்தல் சிறப்பு.

## 19. திருக்கோயில் நிர்வாகம்

136. இந்ததிருக் கோயில் பரம்பரை தர்மகர்த்தர்
கந்தசா மிப்பெரியார் பின்பற்றி – வந்துள்ள
சீர்அனந்த பத்மநாபன் சீரார் வழக்கறிஞர்
பேர்சொல்லும் அன்னார் மகன்.

137. பட்டறிவும் நல்ல படிப்பறிவும் பெற்றதனால்
திட்டமிட்டே கோயில் நிருவாகம் – சட்டத்திற்
குட்பட்டே ஆற்றும் அறங்காவ லர்இவரால்
மட்டற்ற நன்மை மகிழ்.

138. அறங்காவ லர்க்கிங்கே ஆன்றதுணை யாகத்
திறம்படக் கோயில்பணி செய்யும் – மறத்தமிழர்
சீரார்"நிர் வாக அதிகாரி" ராஜ்மோகன்
வாராத நல்மா மணி.

139. ஆன்ற புலமை அமைந்த இவரைப்
போன்ற அலுவலர் பொன்சேவை – நான்மாடக்
கோவூர் திருக்கோயில் கொண்டதனைக் கண்டேநாம்
நாவூர வ ழ்த்துவோம் நன்கு.

## 20. முடிவுரை

140. கண்களுக்கே நல்விருந்தாய், பச்சைப் பசும்வயல்கள்
ஒண்வெற்றி லைக்கொடிக்கால் தோட்டங்கள் – பண்சேர்
திருக்கோயில், நெஞ்சைத் தெளிவாக்கக் "கோவூர்"
வருகை புரிவீர் வகை.

– சிவமயம் –




சுந்தரேச சதகம் நூல் வெளியீட்டு விழா புகைப்படம்

கோவூரில் கோயில் கொண்டுள்ள இறைவன், இறைவி மீது கவிஞர் டாக்டர் கோவூர் இசைதாசன் அவர்கள் "சுந்தரேச சதகம்" மற்றும் "சௌந்தராம்பிகை அந்தாதி" ஆகிய பக்தி நூல்களையும் ஏராளமான கவிதை நூல்களையும் இயற்றியுள்ளார். கோவூர் திருத்தல வரலாற்றை நளவெண்பா போன்று "தல வெண்பா" எனத் தலைப்பு கொண்ட இந்நூலை இயற்றியுள்ள இவர் கோவூரில் சைவ வேளாளர் குடியைச் சேர்ந்த திருமிகு. கோ.கு.கந்தசாமி முதலியார், திருமதி. தாட்சாயணி அம்மாள் இணையருக்கு 9.5.1936ல் தலைமகனாக்ப் பிறந்தவர். ஈரோடு தமிழ்ச்சங்கத்தின் "ஒட்டக் கூத்தர் விருது"ம் "வாரியார் விருதும்" பெற்ற இவர் "கவிஞர் திலகம்" "இன்தமிழ் மாமணி" "அருள் மொழிச் செல்வர்" "தத்துவக் கவிஞர்" "செந்தமிழ்ப் பாவலர்" "கவித் தென்றல்" "தமிழ்மாமணி" "சைவநெறிக் காவலர்" "கவிமாமணி" ஆகிய சிறப்புப் பட்டங்களைப் பெற்றவர். கடந்த ஐம்பது ஆண்டுகட்கும் மேலாக கவிதை இலக்கியப் பணியாற்றி வரும் இவர் மனிதநேயம் மிக்க சிறந்த ஆன்மீகவாதியாவார்.

